# பகவத் பாதை




• மலர் : 3 இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு • சேலம் • அக்டோபர் 2013
• இதழ் : 1 • மாத இதழ் • தனி இதழ் ரூ. 10/- • வருடச் சந்தா ரூ. 100/-



கவலைக்கு முழு சுதந்திரம் கொடுப்போமாயின் அது தானாகவே மறைந்துவிடும்.

- ஸ்ரீ பகவத்



## அன்பு

**- ஸ்ரீ பகவத்**

ஆன்மீக உலகத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, அன்றாட வாழ்வை எடுத்துக் கொண்டாலும் சரி, அன்பு என்ற சொல், நம்மோடு மிகவும் தொடர்புடையதாக உள்ளது.

'அன்பே சிவம்; அன்பே கடவுள்' என்று கூறுவர் ஆன்மிகவாதிகள்.

நம்முடைய அன்றாட வாழ்க்கையில் பெற்றோர் தமது குழந்தையிடமும், உறவினர்களும், நண்பர்களும், கணவனும், மனைவியும் ஒருவருக்கொருவர் அன்பை பரிமாறிக் கொள்கின்றனர்.

இப்படிப் பரிமாறிக் கொள்வதுதான் அன்பா?

**அ**வனது நண்பன் ஒருவன் திடீரென கொஞ்ச நாளாகத் தாடி வளர்த்து வந்தான். நண்பனிடம் அவன் கேட்டான் :

"ஏன் கொஞ்ச காலமாகத் தாடி வளர்த்து வருகிறாய்? தாடியின் மீது உனக்கு அவ்வளவு விருப்பமா?"

"தாடி மீது எனக்கு விருப்பம் கிடையாது. எனது மனைவிக்காக தாடி வளர்த்து வருகிறேன்" - அந்த நண்பன் காரணத்தைக் கூறினான்.

"உனது மனைவிக்கு தாடி மீது மிகவும் விருப்பமா?"

"எனது மனைவிக்கு தாடியென்றால் அறவே பிடிக்காது. அதற்காகத்தான் வளர்க்கிறேன்" - இப்படி அந்த நண்பன் விளக்கினான்.

அன்பைப் பரிமாறிக் கொள்ள வேண்டிய இவர்கள் வெறுப்பையும் பரிமாறிக் கொள்கிறார்கள்.

அன்பு என்றால் என்ன? அன்பு எதனைக் குறிக்கிறது?

நமது நண்பன், நாம் விரும்பியபடியெல்லாம் நடந்து கொள்கிறான்; நமது மனைவி அல்லது கணவன் நமது விருப்பப்படியெல்லாம் நடந்து கொள்கிறார்.

நமக்கு அவர்கள் மீது அன்பு ஏற்படுகிறது. இங்கு என்ன ஏற்படுகிறது?

அவர்கள் நாம் விரும்பியவாறு நடந்து கொள்வதால்

நாம் அவர்களோடு ஒருவித உடன்பாட்டு உணர்வுடன் நடந்து கொள்கிறோம்.

ஒருவர் நமக்குப் பிடிக்காத செயல்களில் ஈடுபட்டு வந்தால் அவருடன் நமக்கு இந்த உடன்பாட்டு உணர்வு ஏற்படாது.

நமக்கு இந்த உடன்பாட்டு உணர்வு இருக்கும் பட்சத்தில்

அடுத்தவர் செய்யும் முரண்பாடான செயல்கள் கூட நமக்கு துன்பத்தை ஏற்படுத்தாது.

நமது குழந்தை மீது நாம் மிகுந்த பாசம் கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். நம் குழந்தை ஓர் அலங்காரப் பொருளைக் கீழே தள்ளி உடைத்துவிடுகிறது. அதை நாம் பொறுத்துக்கொள்வோம். அது நமக்கு வேதனையைத் தராது. உடைந்த பொருள் குழந்தைக்கு காயத்தை ஏற்படுத்தாமலிருந்ததே என சந்தோஷப்படுவோம்.

இதே செயலை பக்கத்து வீட்டுக் குழந்தை செய்திருந்தால் அதை நாம் ஏற்றுக் கொள்ளமாட்டோம். அது நம்மைப் பாதித்துவிடும்.

நமக்குள் இருக்கும் ஓர் உடன்பாட்டு உணர்வைத்தான் நாம் அன்பு என்று குறிப்பிடுகிறோம். உடன்பாடு இல்லாதவற்றை முரண்பாடு என்று கூறுகிறோம்.

முரண்பாடு இருக்கும் இடத்தில் போராட்டம் இருக்கும்.

உடன்பாடு இருக்கும் இடத்தில் மகிழ்வும், சுதந்திரமும் இருக்கும்.

சுதந்திரத்தையும், அன்பையும் பிரிக்கமுடியாது.

"இது இப்படித்தான் இருக்கவேண்டும்; இது இப்படித்தான் நடக்கவேண்டும்; இவர் இப்படித்தான் நடந்து கொள்ளவேண்டும்; இவர் இப்படியெல்லாம் நடக்கக்கூடாது"

- இப்படி நாம் நிர்ப்பந்திப்போமானால், அது அன்பாக இருக்கமுடியாது.

‘நாம் அன்பாக இருக்கவேண்டும்; அன்பாக நடந்துகொள்ளவேண்டும்’ - இப்படிக் கூறப்படுகிறது.

ஆனால் எப்படிதான் அந்த அன்பைக் காட்டுவது?

அடுத்தவர்களிடம் புன்னகையுடன் நடந்துகொள்வதா?

அடுத்தவர்கள் மகிழவேண்டும் என நாம் நினைக்கும்போது

அங்கே ஓர் எதிர்பார்ப்பு உள்ளது; ஒரு நோக்கம் உள்ளது.

அவர்கள் மகிழ்வடைந்தால், நாமும் மகிழ்வடையலாம் என்ற எதிர்பார்ப்பு நம்மிடம் உள்ளது.

‘இது நல்லவிதமான எதிர்பார்ப்புதானே; இதில் என்ன தவறு உள்ளது?’

- இப்படி நாம் கேட்கலாம்.

எங்கெல்லாம் எதிர்பார்ப்புகள் உள்ளனவோ

அங்கெல்லாம், போராட்டமும், வன்முறையும் இருந்தே தீரும்.

எதிர்பார்ப்புகள் உள்ள இடத்தில் ஏமாற்றங்களும் இருந்தே தீரும்.

எதிர்பார்ப்புகளும், போராட்டமும், வன்முறையும் இருக்கும் இடத்தில் அன்பு இருக்கமுடியுமா?

பிறகு, அன்பை எப்படிதான் காட்டுவது?

அன்பை எப்படிதான் வெளிப்படுத்துவது?

அன்பை எவ்வாறுதான் பரிமாறிக்கொள்வது?

இதனால்தான் அன்பும், சுதந்திரமும் இணைந்தே பேசப்படுகிறது.

ஒன்று நிகழ்வதற்கு நாம் சுதந்திரம் கொடுத்தோமானால்

அங்குதான் அன்பு உள்ளது.

நிகழ்வுகளுக்கு நமது அனுமதி தேவையில்லை. அவை அனைத்தும் அவையாகவே நிகழ்கின்றன.

அவற்றோடு நமது எதிர்பார்ப்பை இணைக்காமல் இருந்தால் போதும். ‘இது இப்படி நடந்தால் எனக்குப் பிடிக்கும்; இப்படி நடந்தால் எனக்குப் பிடிக்காது’ என நாம் அந்த நிகழ்வுகளின் சுதந்திரத்தில் குறுக்கிடாமல் இருந்தால் போதும்.

எங்கெல்லாம் சுதந்திரம் செயல்படுகிறதோ, அங்கெல்லாம் அன்பின் செயல்பாடு உள்ளது.

இறைவனைப் பற்றிக் குறிப்பிடும்போது

இறைவன் "சர்வ சுதந்திரன்" என்று கூறப்படுகிறது.

சர்வசுதந்திரன் என்பது எதனைக் குறிக்கிறது?

சூரியன் ஒளிர்கிறது. சூரிய ஒளியைப் பயன்படுத்தி நாம் நமது அன்றாட வேலைகளைச் செய்கிறோம்.

குளிர் பிரதேசத்தில் உள்ளவர்கள் சூரிய வெப்பத்தினால் மகிழ்வடைகின்றனர்.

உஷ்ணப்பிரதேசத்தில் உள்ளவர்கள் சூரிய வெப்பத்தினால் துன்பமடைகின்றனர்.

சூரியனுக்கு இவற்றில் ஏதாவது பங்கு உண்டா?

அது எந்தப் பொறுப்புகளும் இல்லாமல் அதுவாக உள்ளது.

நாம் அதனை நமது வசதிக்கு பயன்படுத்துகிறோம்.

வெளிச்சத்தைக் கொடுத்து செயல்களை ஊக்கப்படுத்துவதோ

உஷ்ணத்தைக் கொடுத்து சிலரை மகிழ்விப்பதோ மற்றும் சிலரைத் துன்புறுத்துவதோ அதன் நோக்கம் அல்ல.

வெளிச்சத்தைக் கொடுப்பதும், உஷ்ணத்தைக் கொடுப்பதும் சூரியனின் இயல்பு.

அது, அதன் போக்கில், அதுவாகவே இருக்கிறது. நாம்தான் அதனை நமது வசதிக்கேற்ப பயன்படுத்திக்கொள்கிறோம்.

எந்த நோக்கமும் இல்லாமல்

இயற்கையாக

தன்மயமாக

- இருப்பதே சர்வ சுதந்திரமாக இருப்பது.

இறைவன் சர்வ சுதந்திரன் என்று கூறப்படுகிறான்.

‘அவனது சாந்நியத்தில் உலகம் இயங்குகிறது; அவன் எதையுமே இயக்குவதில்லை’ - இப்படி இறைவனைப் பற்றிக் கூறப்படுகிறது.

நம்மைச் சுற்றி எத்தனையோ நிகழ்ச்சிகள் நடக்கின்றன.

அந்த நிகழ்ச்சிகள் நமக்குப் பிடிக்காதவையாக இருக்கலாம். ஆனால் அந்த நிகழ்ச்சிகளுக்கு நாம் காரணமல்ல.

சிலர் மாமியாரைக் குறை கூறுகின்றனர் அல்லது மாமனாரைக் குறை கூறுகின்றனர். சிலர் மருமகளைக் குறைகூறுகின்றனர். கணவன் மனைவியைக் குறை கூறுகிறார்; மனைவி கணவனைக் குறை கூறுகிறார்.

ஒவ்வொருவரும் அவரவர் இயல்புப்படி செயல்படுகின்றனர்.

ஆனால் மற்றவர்களது செயல் நமக்குப் பிடிப்பதில்லை. அவர்களைக் குற்றம் சுமத்துகிறோம். அவர்களோடு சண்டையிடுகின்றோம்.

அவர்களோடு நாம் எவ்வாறுதான் நடந்து கொள்வது?

அவர்களை நாம் எவ்வாறு எதிர்கொள்வது?

ஒருவர் வேண்டுமென்றே தவறாக நடந்து கொள்ளலாம்; அல்லது அவரையறியாமல் அவ்வாறு நடந்து கொள்ளலாம்.

அவருடைய செயலுக்கு அவர் மட்டுமே பொறுப்பு; நாம் பொறுப்பு அல்ல.

‘அவர் இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும்; இப்படி நடந்து கொள்ளக் கூடாது’ என நாம் விரும்பும்போது

அவர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற பொறுப்பை நாம் எடுத்துக் கொண்டு விடுகிறோம்.

ஒரு புலியை, அதன் வன்முறையோடு சேர்த்து நாம் ஏற்றுக் கொள்கிறோம். அது பசுவைப் போலவும், மானைப் போலவும் மென்மையாகச் செயல்படவேண்டும் என்று எதிர்பார்ப்பதில்லை.

இப்படி,

எந்த ஒரு நிகழ்வோடும், நாம் நமது எதிர்பார்ப்புகளை இணைக்காதபோது,

நாம் அதனோடு சுதந்திரத்தை இணைத்துவிடுகிறோம்.

சுதந்திரத்தைக்கூட நாம் இணைப்பதில்லை. சுதந்திரமாகச் செயல்படும் அதன் சுதந்திரத்துக்கு எதிராக நமது எதிர்பார்ப்புகளைக் கொண்டு வருவதில்லை.

நமது மாமியாரோ அல்லது மருமகளோ

நமது கணவரோ அல்லது மனைவியோ இப்படி நமக்குப் பிடிக்காதவாறு நடந்து கொள்கிறார்.

நம்மைத் திட்டிவிடுகிறார் என்றே வைத்துக்கொள்வோம்.

அது நம் மனதில் தைத்துவிடுகிறது. நம் மனம் வேதனைப்படுகிறது. நமக்கு ஏற்படும் மன வேதனை எப்படி ஏற்படுகிறது?

'அவர் நம்மைத் திட்டிவிட்டார்; அவர் திட்டும்போது நாம் வேதனைப்படுவதுதான் சரியானது; ஆகவே வேதனைப்பட்டுத்தான் ஆகவேண்டும்' என்று நாம் முடிவு செய்து நாமாக நமக்குள் மனவேதனையைக் கொண்டு வருகிறோமா?

அல்லது அவர் திட்டும்போது நம்மையறியாமல் நமக்குள் மனவேதனை ஏற்படுகிறதா?

நமக்குள் ஏற்பட்ட மனவேதனைக்கு நாம் பொறுப்பல்ல; அது நம்மையறியாமல் நமக்குள் ஏற்பட்டுள்ளது.

நமக்குள் ஏற்பட்ட வேதனையிலிருந்து விடுபடவேண்டும் என எண்ணும்போது தான்

நாம் பொறுப்பை எடுத்துக்கொள்ள ஆரம்பிக்கின்றோம்.

- நம் மனம் எப்படிச் செயல்படவேண்டும், எப்படிச் செயல்படக்கூடாது என்ற பொறுப்பை எடுத்துவிடுகின்றோம்.

- அதன் சுதந்திரமான இயக்கத்தில் தலையிட்டுவிடுகின்றோம்.

இறைவன் சர்வசுதந்திரன் எனக் கூறப்படுவதைப் பார்த்தோம்.

இறைநிலையையும், சுதந்திரத்தையும் பிரிக்கமுடியாது.

நிகழ்வுகளின் சுதந்திரத்தை நாம் ஏற்றுக் கொள்ளும்போது

அந்த நிகழ்வுகளோடு

தெய்வீகமும் இணைந்து கொள்கிறது.

அது அகமாயினும் சரி, புறமாயினும் சரி,

சுதந்திரம் மட்டுமே அனைத்தையும் தெய்வீகமாக்குகிறது.

- அனைத்தையும் தூய்மையாக்குகிறது; புனிதமாக்குகிறது.

இந்தச் சுதந்திரம் எப்படிச் செயல்படுகிறது?

தீவிரவாதி ஒருவன் துப்பாக்கியால் மக்களைக் கொன்று குவிக்கிறான்.

அவனுடைய செயலை அப்படியே அங்கீகரிப்பதுதான் சுதந்திரமா?

ஒரு புலி வன்முறையோடு நடந்து, மான் ஒன்றைக் கொல்லுகிறது.

புலியை, அதன் வன்முறையோடு ஏற்றுக்கொள்வது என்பது

அதன் வன்முறைக்குப் பலியாவது என்பதல்ல.

நம்மீது ஒருவர் வன்முறையைக் காட்டுகிறார் என்றால்

அந்த வன்முறையிலிருந்து தப்பித்துக் கொள்வது என்பது

சுதந்திரத்துக்கு எதிரானதல்ல.

'அவர் அப்படிச் செயல்படக்கூடாது; அவர் அப்படிச் செயல்படுவது சரியானதல்ல' என்று அவரைக் குற்றஞ்சாட்டுவதுதான்

சுதந்திரத்துக்கு எதிரானதாகும்.

'அவரைக் குற்றஞ்சாட்டக்கூடாது' என்பது சரியானதா?

அவரது நடவடிக்கைகள் நியாயமானதா?

எவர் வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும் செயல்பட்டுவிட்டுப் போகவேண்டியது தானா?

நியாயத்துடனும், தர்மத்துடனும் செயல்படவேண்டிய அவசியம் இல்லையா?

நியாயத்துடனும், தர்மப்படியும் செயல்பட வேண்டியது ஒவ்வொருவருடைய தனிப்பட்ட கடமை.

அதர்மத்துடன் வாழ்பவர்களிடமிருந்தும், அவர்களது அடாத செயல்களிலிருந்தும்,

நம்மையும், நம்மைச் சார்ந்தவர்களையும், நமது உடைமைகளையும் காத்துக்கொள்ள வேண்டியது நமது கடமை.

அவர்களை நெறிப்படுத்த வேண்டியது நமது பிரதான கடமையல்ல.

நமக்குத் தெரிந்த ஒருவர் நாகரிகமற்ற வார்த்தைகளால் நம்மைத் திட்டியவாறே தனது அருகே வருமாறு நம்மை அழைக்கிறார்.

அவருடைய வார்த்தைகள் நம் மனதைப் புண்படுத்துகின்றன.

பதிலுக்கு அவரைத் திட்டி அவமானப்படுத்த வேண்டும் என்ற நோக்கில் அவரை நெருங்குகின்றோம்.

அருகே சென்று பார்க்கும்போது அவர் நல்ல குடிபோதையில் இருப்பது தெரிகிறது.

அவரைத்திட்டி என்ன பிரயோஜனம்?

குடிகாரர் எப்படிச் செயல்படவேண்டும் என்று நெறிமுறைகளை வகுக்கமுடியுமா?

பைத்தியகாரன் எப்படி எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்று நெறிமுறைகளை வகுக்கமுடியுமா?

அவர்களுடைய குற்றங்குறைகளோடு அவர்களை முழுமையாக ஏற்றுக் கொள்வதுதான் அவர்களை முழுமையாக ஏற்றுக்கொள்வதாகும்.

- அவர்களுக்குச் சுதந்திரம் வழங்குவதாகும்.

சுதந்திரத்தின் பிரதான பகுதி - அன்பினுடைய பிரதான பகுதி நமது மன இயக்கந்தான்.

நமக்கு ஏற்படும் மன உணர்ச்சிகளுக்கு முழு அங்கீகாரமும், முழுச் சுதந்திரமும் கொடுப்பதுதான் முக்கியமானது.

நமது மன உணர்ச்சிகள் யாவும் நமக்குள் ஏற்படும் Reactions - எதிர்விளைவுகள் மட்டுமே.

அவற்றை சீரமைக்கவேண்டிய அவசியம் எதுவும் நமக்கு இல்லை. அங்கு நமக்கு எந்த வேலையும் இல்லை.

நமது உணர்ச்சிகள் எவையும் நமது அனுமதியைப் பெற்றுக்கொண்டு வருவதில்லை. அவையாக வந்து, அவையாகவே மறைந்து விடுகின்றன.

ஆனால் நாம் அவற்றின்மீது ஏறி சவாரி செய்துவிடுகிறோம்.

ரோட்டில் நாம் நின்று கொண்டிருப்போமானால், ஆட்டோக்கள் பல வரத்தான் செய்யும்.

அப்படி வரும் ஆட்டோவை நிறுத்தி நாம் ஏறிக்கொண்டால் என்ன ஆகும்?

ஆட்டோ டிரைவர் நம்மைக் கேட்பார் "எங்கே போகவேண்டும்?" என்று.

"நீயும் ஆட்டோவும் இல்லாத இடத்துக்கு கூட்டிப்போ" - என்று நாம் அவருக்கு பதில் கொடுத்துவிடுகிறோம்.

அப்படி என்றால் என்ன பொருள்? கவலையின் மீது ஏறிக்கொண்டு, கவலையில்லாத இடத்துக்குப்போக முயற்சி செய்கிறோம்.

கவலைக்கு முழு சுதந்திரம் கொடுப்போமாயின்

அது தானாகவே மறைந்துவிடுகிறது. நாம் நமது உணர்ச்சிகளைச் சீரமைக்க முயற்சி செய்யுந்தோறும்

நாம் வேறு, நமது கவலை வேறு என்று நம்மை நாமே இரண்டு துண்டுகளாக்கிவிடுகின்றோம்.

அதற்கு முழு சுதந்திரம் கொடுக்கும்தோறும்

காண்பவனுக்கும், காணப்படும் பொருளுக்கும் இடையே உறவு ஏற்பட்டு இரண்டும் ஒன்றாகிவிடுகின்றன.

இந்த இணைவுதான் அன்பாக அமைந்துள்ளது.

இந்த அன்புதான் தெய்வீகமாக உள்ளது.

அன்பின் செயல்பாடுதான் சுதந்திரம்; சுதந்திரத்தின் செயல்பாடுதான் அன்பு.



## ஐயாவுடைய நிகழ்ச்சி

நவம்பர் மாதம் 8-ஆம் தேதி வரை திருச்செந்தூர் : 9944215677

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 10-11-2013 ஞாயிறு | பெரம்பூர் அன்னதான சமாஜம், மீனாட்சி தெரு, பெரம்பூர் ரயில்வே நிலையம் அருகில், பெரம்பூர், சென்னை-11. | **தன்னை அறியும் ஞானம்** மாலை 5-00 to 8-00 மணிவரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், செல் : 99520-71525 72991-08757 |
| 17-11-2013 ஞாயிறு | ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம், அம்பத்தூர் சென்னை-58 | ஸ்ரீ பகவத் மிஷன் ஓர் ஆண்டு நிறைவு விழா, புதிய வளாகம் திறப்பு விழா காலை 10-00 மணிக்கு | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், செல் : 99520-71525 72991-08757 |

## ஞானமுகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான உரையை நேரடியாகக் கேட்கவும், ஞானப்புரிதலில் நமது சந்தேகங்களை நேரடியாகக் கேட்டு தெளிவு பெறவும் மற்றும் அவருடன் தனியாக கலந்துரையாடலில் ஈடுபடவும் இது ஒரு சரியான வாய்ப்பு.

ஒரு ஞானியுடன் 2 நாள் தங்கியிருந்து நாம் பெற்ற தெளிவில் உறுதிபெற்று நாமும் ஞானியாக மலர இது ஒரு சரியான தருணம்.

ஆர்வமுள்ள அனைவரும் பங்குபெற்று பயனடைய அழைக்கின்றோம்.

**சென்னை**

நாள் : 22-11-2013 மாலை முதல் 24-11-2013 மாலை வரை
இடம் : ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
23/10, பழைய பரோடா வங்கித் தெரு, செகரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-53.

மேலும் விபரங்களுக்கும், முன்பதிவிற்கும் தொடர்பு கொள்ள செல் : 99520-71525, 7299108757
நன்கொடை ரூ.1600/- (தங்குமிடம், உணவு, தேனீர் மற்றும் குறிப்பேடு உள்பட)

**நெரூர்**

நாள் : 29-11-2013 மாலை முதல் 1-12-2013 இரவு வரை
இடம் : ஸ்ரீ கைலாஷ் ஆஸ்ரமம், ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி வளாகம், நெரூர், கரூர்.
வழி : கரூரிலிருந்து முக்கூடலூர் செல்லும் பேருந்தில் பரிசல்துறை என்கிற சதாசிவன் கோவில் நிறுத்தத்தில் இறங்கவேண்டும். கரூர் இரயில் நிலையத்தில் இறங்குபவர்கள் பக்கத்தில் இருக்கும் மார்க்கெட் ஸ்டாப் வரை நடந்துசென்று பேருந்தில் ஞானமுகாமிற்கு வரலாம்

விபரங்களுக்கும், முன்பதிவு செய்துகொள்வதற்கும் 9245440575,9942289420, 9360579181 என்ற எண்களில் தொடர்பு கொள்ளவும். (உணவுச் செலவுகளை மட்டும் பங்குபெறும் அனைவரும் பகிர்ந்துகொள்ளலாம்)

- அனைவருக்கும்படுக்கை வசதி செய்யப்பட்டுள்ளது. போர்வை மற்றும் டார்ச் லைட் அவசியம் கொண்டு வரவும்.
- ஆட்டோ அல்லது கார் தேவைப்படுபவர்கள் அதைப்பற்றிய தொலைபேசியில் பெற்றுக்கொள்ளலாம்.
- தங்கள் வருகையின் நாள் மற்றும் நேரம் தெரிவிப்பீர்களேயானால் உணவு தயார் செய்ய ஏதுவாக இருக்கும்.

- கலந்துகொள்ள ஆர்வமுள்ள அன்பர்கள் முன்பதிவு செய்து கொள்வது அவசியம்.
- பெண்கள் தங்குவதற்கென தனி இடவசதி உள்ளது.

அனைவரும் வருக! ஞானத்தெளிவு பெறுக!

## ?கேள்வி பதில்

கேள்வி : நான் ஓர் Accu - Healer மருத்துவர். என்னுடைய Accu - Healing சிகிச்சையின் மூலம் பலரும் தங்களின் வியாதிகளிலிருந்து நல்ல முன்னேற்றம் அடைந்துள்ளார்கள். மேலும் நான் மருத்துவமுகாம்கள் மற்றும் கல்லூரிகள் என பல இடங்களிலும் ஆங்கில மருத்துவத்தின் பக்க விளைவுகளையும், பாதிப்புகளையும், கொடுமைகளையும் புள்ளி விபரத்துடன் எடுத்து கூறுவது எனது வழக்கம். இப்படிப்பட்ட சூழ்நிலையில் என்னுடைய உடல்நிலை மிகவும் மோசமாகப் பாதிக்கப்பட்டு, வேறு வழியே தெரியாமல் ஆங்கில மருத்துவமனை ஒன்றில் அனுமதிக்கப்பட்டு, பிறகு நலமாகி வீடு திரும்பினேன். தற்போது உடலைப் பொறுத்தவரையில் Normal ஆகத்தான் இருக்கிறேன். ஆனால் என் மனதில் ஏற்படும் குற்ற உணர்ச்சியிலிருந்து என்னால் மீண்டு வெளிவரவே முடியவில்லை. இந்தச் சூழ்நிலையை நான் எப்படி எதிர்கொள்வது?

பதில் : அவர் ஓர் Accu - Healer மருத்துவர். தினமும் அவரிடம் வரும் நோயாளிகளுக்கு Accu - Healing சிகிச்சையைக் கொடுத்து அவர்களை வியாதியின் பிடியிலிருந்து விடுவிப்பது அவரது தினசரிப் பணி. மேலும் ஆங்கில மருத்துவத்தின் குறைபாடுகள், பக்கவிளைவுகள், அவலங்கள், கொடுமைகள் என அவற்றைப் பற்றி பலருக்கும் எடுத்துக் கூறுவது வழக்கம். ஆங்கில மருத்துவத்திற்கு எதிராக கட்டுரைகள் எழுதுவதும், பேசுவதும் நடைமுறை வாழ்வின் ஓர் அங்கமாக இருந்து செயல்பட்டு வந்தார்.

கடந்த சில மாதங்களாக அந்த Healer மூச்சு வாங்குதல் (Wheezing) தொந்தரவு, உடல் எடை குறைதல் மற்றும் தூக்கமின்மையால் உடல்நிலை பாதிக்கப்பட்டார். மேற்சொன்ன உடல் தொந்தரவுகள் மேலும் அதிகரித்த நிலையிலும் வேறு எந்த மருத்துவத்திற்கும் போகாமல் நாம் நம்முடைய Accu - Healing மூலமே சரிசெய்து கொள்ளலாம் என திடமாக முடிவு செய்திருந்தார். ஆனால் அவரின் உடல் நோயின் தாக்கத்தை எதிர்க்கும் தன்மை குறைந்து வருவதை அவரே உணர்ந்தார். ஒரு கட்டத்திற்குமேல் அவரால் 4, 5 அடி தூரம்கூட நடக்கமுடியாமல், ஒரு கை மற்றும் கால் செயல் இழக்கத் தொடங்கி வாய் குளறி, கண்கள் இருண்டு மயங்கி அப்படியே கீழே விழுந்தார். அவரை அவரது மனைவி உடனடியாக ஆங்கில மருத்துவமனை ஒன்றில் அவரது உறவினர் Doctor ஒருவர் மூலம் சேர்த்தார்.

Healer-க்கு MRI SCAN மற்றும் பல Blood Test-களும் எடுத்து பரிசோதிக்கப்பட்டது. Healer-க்கு மூளையில் ஓர் இரத்த குழாய் அடைப்பு உள்ளது என தெரியப்படுத்தி, அதற்கு தேவையான மருந்தை Glucose Drip-ல் கலந்து இரத்த குழாய் வழியாக செலுத்தப்பட்டது. 2 மணி நேரத்தில் கண் விழித்தார், வாய்க்குளறல் குறைந்து, கை கால்கள் செயல்படத் தொடங்கின. அடுத்த நாள் ICU-விலிருந்து regular room-க்கு மாற்றப்பட்டு normal நிலைக்கு வந்தார் Healer. அடுத்த இரண்டு நாட்களில் வீடு திரும்பினார்.

Healer-க்கு உடல்நிலை normal-க்கு வந்தாலும் மனதில் ஏற்படும் குற்ற உணர்ச்சியைத் தடுக்கமுடியவில்லை. அவரை திரும்ப, திரும்ப குற்ற உணர்ச்சி தாக்கி மன அமைதியை இழக்கச் செய்தது. "நான் இனிமேல் எப்படி Accu-Healing சிகிச்சையை மற்றவர்களுக்குச் செய்வது. ஆங்கில மருத்துவத்தின் கொடுமைகளையும், குறைபாடுகளையும் கூறிவந்த நமக்கே ஆங்கில மருத்துவம் எடுக்க வேண்டிய சூழ்நிலை வந்துவிட்டதே" என மனதில் புலம்பிக்கொண்டு இருந்தார். இனி யாராவது நம்மிடம் "என்ன சார் நீங்களே ஆங்கில மருத்துவம் எடுக்கவேண்டிய சூழ்நிலைக்கு வந்துவிட்டீர்களா?" எனக்கேட்டால் என்ன பதில் சொல்வது எனப் புரியாமல் தடுமாறி இருந்தார். ஆங்கில மருத்துவத்திற்கு எதிராக, தான் எடுத்திருந்த திடமான முடிவிலிருந்து தானே தவறியதை நினைத்து தன்னைத் தானே நொந்துகொண்டார். நம்மைப் பற்றி சக Healer-கள் என்ன நினைப்பார்கள் என மிகவும் வேதனைப்பட்டார். உடல்நிலை சரியாக இருந்தும்கூட, மன அமைதி முற்றிலுமாக இழந்து மிகவும் கவலை அடைந்தார். "இந்த மனத்துயரத்திலிருந்து நான் எப்படி வெளிவருவது?" எனக் கேட்டார் Healer.

நீங்கள் செய்யும் Accu - Healing மருத்துவம் மிகவும் உயர்ந்ததுதான் அதில் எந்தக் குறைபாடும் கிடையாது. மாற்று மருத்துவம் அனைத்துமே ஆங்கில மருத்துவத்தைக் காட்டிலும் சிறந்தது தான் என்பதில் எந்த ஐயமும் கிடையாது. ஆங்கில மருத்துவத்திற்கு எதிராக நீங்கள் உருவாக்கியிருந்த திடமான மனத்தீர்மானம் தான் தவறு. நீங்கள் உருவாக்கியிருந்த மனத்தீர்மானத்திலிருந்து நீங்களே தவறியதால் உங்களை உங்களாலே ஏற்றுக்கொள்ள முடியவில்லை. நீங்கள் இதுவரை ஆங்கில மருத்துவத்திற்கு எதிராக எழுதிய கட்டுரைகள், பேச்சு உரைகள், தினமும் உங்களைத் தேடி வரும் நோயாளிகளிடம் ஆங்கில மருத்துவத்தின் குறைபாடுகளைப் பற்றிய உங்களது பேச்சுக்கள் என எல்லாம் ஒன்றுகூடி உங்களை நோக்கி கேள்வி கேட்கத் தொடங்கின. இப்படி கூறிவந்த நமக்கு ஓர் ஆங்கில மருத்துவமனையில் ICU பிரிவில் சிகிச்சை என்ற சம்பவத்தை உங்களால் ஏற்றுக்கொள்ளமுடியவில்லை. உடல் Normal நிலை அடைந்தது கூட உங்களுக்குப் பெரியதாகத் தோன்றவில்லை. இனி நாம் எப்படி மற்றவர்களுக்கு Accu - Healing சிகிச்சை பார்ப்பது, ஆங்கில மருத்துவத்தின் குறைபாடுகளைக் கூறுவது, அதற்கு நாம் எந்த வகையிலும் தகுதி இல்லாதவர் என நினைத்துக்கொண்டு வருத்தப்படுகிறீர்கள். உண்மையில் எந்தவித இரசாயனமும் இல்லாத உங்களுடைய Accu - Healing சிகிச்சை தான் சிறந்தது என்பதில் எள் அளவும் சந்தேகம் இல்லை. முற்றிலும் எதிர்பாராத சூழ்நிலையில், தவிர்க்க முடியாத காரணத்தினால் உங்கள் உடலைக் காப்பாற்றிக்கொள்ள ஆங்கில மருத்துவம் எடுத்துக்கொண்டதில் எந்தத் தவறும் கிடையாது. இப்படிப்பட்ட நிலையில் ஒரு தற்காலிக உடல் நிவாரணத்திற்காக நீங்கள் எடுத்துக்கொண்ட முயற்சி ஒரு புத்திசாலித் தனமான செயலாகும்.

உதாரணமாக ஒரு நபருக்கு எதிர்பாராத விதமாக Accident ஏற்பட்டு விட்டதாக வைத்துக்கொள்வோம். அவரின் அவசரத் தேவைக்கு ஆங்கில மருத்துவத்தை எடுத்துக்கொண்டு கொஞ்சம் குணமாகிய பிறகு அவரது வழக்கமான Accu - Healing சிகிச்சையைத் தொடர்ந்து எடுத்துக்கொள்வதில் எந்தத் தவறும் கிடையாது, அதேபோல் ஆங்கில மருத்துவத்துறையினரும் அவசர காலங்களைத் தவிர மற்ற நேரங்களில் இரசாயனமே இல்லாத Accu - Healing மற்றும் மாற்று மருத்துவம் எடுத்துக்கொள்வது தான் சிறப்பு ஆகும்.

உங்கள் பிரச்சனைக்குக் காரணம் ஆங்கில மருத்துவத்திற்கு எதிரான உங்களுடைய தீர்மானந்தான். நீங்கள் உருவாக்கிய மனத்தீர்மானத்தை நீங்களே தளர்த்திக்கொள்ளும் போது உங்களுடைய மனப்பிரச்சினைகளும் தானாகவே தளர்ந்து விடும்.

எந்தக் கொள்கையிலும் அதிகமான தீவிரவாதம் தேவையில்லை. அந்தக் கொள்கையின் தீவிரவாதமே நம்மை அந்தக் கொள்கையிலிருந்து தவறச் செய்துவிடும். உதாரணமாக ஒரு ஜோசியரிடம் சமூகத்தில் முக்கிய பொறுப்பில் இருக்கும் உயர் அதிகாரிகள் பலரும் சந்தித்து தங்களுடைய ஜாதகத்தைக் காட்டி கிரக பலன்களை, பரிகாரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டு செல்வது வழக்கம். ஜோசியரும் எல்லாமே ஜாதகப்படியும், கிரக அமைப்புப்படியும் தான் நடக்கும் என்பதை தீர்க்கமாக நம்பி வந்தார். எனவே எல்லா திருமணங்களும் ஜாதகப்பொருத்தம் பார்த்தே செய்யவேண்டும். அதுவே நல்ல பலனைத் தரும் என அனைவரிடமும் கூறி வந்தார். இந்த நிலையில் அவரது ஒரே மகள் காதல் வயப்பட்டதால் காதல் திருமணம் செய்து வைக்கவேண்டிய சூழ்நிலை அவருக்கு ஏற்பட்டது. அதனால் வேறு வழியே இல்லாமல் மகளுக்கு ஜாதகமே பார்க்காமல் திருமணம் செய்யவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டார் ஜோசியர். இதனால் அவர் ஜோசியத்தை விட்டுவிடவில்லை. ஏதோ சில தவிர்க்கமுடியாத காரணங்களால் தன் மகளுக்கு ஜோசியம் பார்க்கமுடியாமல் திருமணம் செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் ஜோசியமே தவறு என்று கூறுவதற்கில்லை.

எந்தக் கொள்கையிலும் பிடிவாதமாக இருக்கத் தேவையில்லை. பிடிவாதத்தை மட்டும் தளர்த்திக் கொண்டு அதில் இருக்கும் நல்ல விசயத்தை மட்டும் கருத்தில் எடுத்துக்கொண்டு செயல்பட்டால் போதும். எந்த பிரச்சினையையும் திறந்த மனதுடன் எதிர்கொள்ள முடியும்.

உதாரணமாக, தீவிரவாதிகளுக்குக் கொடுக்கப்படும் கடைசி நிலைப் பயிற்சி (Brain wash) மூளைச் சலவை செய்தல் என்னும் பயிற்சி. அந்தப் பயிற்சியில் தீவிரவாதக் கொள்கையை திரும்பத் திரும்ப மனதில் பதியவைத்து, தங்களின் கொள்கைக்கு எதிராகச் செயல்படும் எவரையும் மனித வெடிகுண்டாகச் செயல்பட்டு அழிக்கும் தன்மைக்கு-தீவிரவாதம் என்னும் பிடிவாத நிலைக்கு தள்ளப்படுகிறார்கள். அப்படிப்பட்ட பிடிவாதத்தால் மன இறுக்கம் ஏற்படுமே தவிர ஒருபோதும் மனத்தளர்வு ஏற்படப்போவதில்லை. இதனால் எந்தப் பிடிவாதமும் இல்லாமல் உங்களின் Accu - Healing சிகிச்சையை தொடர்ந்து உங்களை நாடி வரும் நோயாளிகளுக்கு, அதில் உள்ள சிறப்பு அம்சங்களை எடுத்துக்கூறி சிறப்பாகச் செய்து வாருங்கள் எனக் கூறப்பட்டது.

"வாதத்திற்கு மருந்து உண்டு
பிடிவாதத்திற்கு மருந்து ஏது?"

V.A.P. சரவணன், சேலம்
செல் : 99942-05880

## நன்கொடை வேண்டுகோள்

நமது பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் ஒரு வேண்டுகோள்

நமது வாழ்வியலின் உயர்ந்த நிலையான ஞானத்தெளிவை அனைவருக்கும் கொண்டு சேர்க்கும் உயர்ந்த பணியை பல வழிகளிலும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் நாம் எடுத்து செயல்பட்டு வருகிறோம்.

இதற்குத் தேவையான பண உதவிகளை சிலரின் பங்களிப்பாலும், உதவிகளாலும் மட்டுமே நாம் பெற்று நடத்தி வருகிறோம்.

இதனால் பல சமயங்களில் பணப் பற்றாக்குறை ஏற்பட்டுவிடுகிறது.

நீங்கள் எத்தனையோ வகைகளில் பல நல்ல காரியங்களுக்கு நன்கொடை வழங்கி உதவுபவராக இருக்கலாம். அந்த வகையில் எத்தகைய துன்பங்களையும், துயரங்களையும், எளிதாக எதிர்கொள்ளும் ஒரு தீர்க்கமான மனத்தெளிவைக் கொடுக்கும் ஞானப்புரிதலை அனைவருக்கும் எடுத்துச்செல்லும் முயற்சியில் இருக்கும் நமது ஸ்ரீ பகவத் மிஷனிற்கும் வழங்கும் பட்சத்தில் உங்கள் நன்கொடையும் ஒரு புனிதத் தொண்டிற்கு வழங்கப்படும் ஓர் உயர்ந்த பங்களிப்பாக அமைந்துவிடும்.

ஆகவே உங்கள் அனைவரையும் கீழ்கண்ட ஏதாவது ஒரு வகையில் பங்கேற்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

1. ஸ்ரீ பகவத் மிஷன் தொண்டில் நன்கொடை வழங்கி பங்கேற்க கீழ்க்கண்ட வங்கி எண்ணில் செலுத்தலாம்.

A/c Name : Sri Bagavath Mission, HDFC A/C No. :15907620000075 IFSC : HDFC0001590

2. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுக்கு நேரடியாக நன்கொடை அளிக்க விரும்புபவர்கள் கீழ்க்கண்ட வங்கி கணக்கு எண்ணில் செலுத்தலாம்

A/c Name : B.A. Bagavath Singh, HDFC A/C No. : 50100010152310 IFSC : HDFC0001590

3. பகவத் பாதையில் ஆண்டு சந்தாதாரராக இருப்பவர்கள் ஆயுள் சந்தா அன்பர்களாக மாறி மேலும் பகவத் பாதை சிறப்பாக வெளிவர உதவலாம்.

A/c Name : Sri Bagavath Mission, HDFC A/C No. :15907620000075 IFSC : HDFC0001590

நன்றியுடன்
ஸ்ரீபகவத் மிஷன், சேலம்.

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதையின் பயணத்தில் நாம் அனைவரும் இரண்டு ஆண்டுகள் நிறைவடைந்து மூன்றாம் ஆண்டில் அடி எடுத்து வைத்திருக்கின்றோம்.

நமது இதழின் மூலம் பகவத் ஐயா அவர்களின் ஞானப் புரிதலை சமுதாயத்திற்கு கொடுத்துக் கொண்டு வருகிறோம்.

இதுவரை வந்த எத்தனையோ ஞானிகள், மகான்களின் உபதேசங்கள் மற்றும் வழிமுறைகளுக்கும் ஐயாவின் அணுகுமுறைக்கும் பெரிய வித்தியாசங்கள் தெரிந்தாலும், நோக்கம் ஆன்ம ஞான விடுதலை அடையவேண்டும் என்பதே.

ஞானம் என்றால் என்ன? விடுதலை என்றால் என்ன? என்று அவற்றின் தன்மையையும் எல்லையையும் சரிவர எடுத்துக்கூறும் நமது பகவத் ஐயா அவர்களின் புதிய அணுகுமுறையால் எளிமையாக்கப்பட்டு மிகவும் சர்வ சாதாரணமாக ஞானத்தெளிவை பலரும் அடைந்துவிட்டனர்.

இதுவரை ஆன்மிகத்தில் தேடுதலில் ஈடுபட்டவர்களுள் எங்கோ ஒருவர் எவரோ ஒருவர்தான் ஞானத்தை அடைந்திருந்த நிலையில் தற்போது இத்தகைய தெளிவடைவோர்களின் எண்ணிக்கை பகவத் ஐயாவின் புதிய அணுகுமுறையான மனத்தைப்பற்றிய புரிதலால் அதிகரித்து வருவது புதியதாக நடந்து வருகிறது.

நமது அணுகுமுறையில் பயனடைந்தவர்கள் தம்மை வெளிப்படுத்திக்கொள்வதில் தயக்கம் காட்டினாலும் அவர்களளவில் அவர்கள் நிறைவாகத்தான் இருக்கிறார்கள்.

இருப்பினும் தெளிவுக்கு முன்பிருந்த தன் நிலையையும் தெளிவுக்குப் பின் உள்ள தனது மாற்றத்தையும், தான் இதைப் புரிந்து கொண்ட விதத்தையும் நமது பகவத் பாதையில் பகிர்ந்து கொள்ளும்போது புதிய அன்பர்கள் பலருக்கும் இது உதவியாக இருக்கும்.

எனவே பலரின் நன்மையைக் கருத்தில் கொண்டு பயனடைந்த உங்கள் அனுபவத்தை எழுத்து வடிவமாக நமது பாதைக்கு அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்,
**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஜென் கதை

## செயலற்ற செயல்

மன்னன் ஒருவன் இருந்தான். அவன் சிறந்த முறையில் ஆட்சி செய்துவந்தான். அவன் ஆட்சியில் வரிச்சுமை இல்லை, வறுமை இல்லை, கள்வர் பயம் இல்லை. கலைகள் தழைத்தன. அறிஞர்கள் கௌரவிக்கப்பட்டனர்.

இவ்வளவையும் திறம்பட செய்துகொண்டிருந்த அவன் மனதளவில் சற்றும் நிம்மதி இன்றி இருந்தான். நாளுக்கு நாள் அவனது மனச்சுமை அதிகரித்தது. கடைசியில் ஓர் ஊரில் சாந்த சொரூபமான ஞானி ஒருவர் இருப்பதைக் கேள்விப்பட்டு அமைதியை நாடி அவரைத் தரிசிக்கச் சென்றான்.

அந்த ஞானி வயதில் முதிர்ந்தவராகவும், ஆன்ம பலம் நிரம்பியவராகவும் இருந்தார். அவரைக் கண்ட மன்னனுக்கு அவர்மீது அளவுகடந்த பக்தியும், மரியாதையும் ஏற்பட்டன. தனக்கு சரியான தீர்வு கிடைக்கும் என்ற நம்பிக்கையும் வந்தது.

மன்னனை அன்புடன் வரவேற்ற அந்த ஞானி அவனிடம் விரிவாகப் பேசினார். அவன் மனத்துயரை அறிந்துகொண்டார்.

"அரச காரியங்கள் செவ்வனே நடக்கின்றனவா?"

"ஆம் சுவாமி, அதில் ஒரு குறையுமில்லாமல் சிறப்பாக செய்து வருகிறேன்".

"மக்கள் துயரின்றி இருக்கிறார்களா?"

"ஆம்; எந்த குறையுமின்றி பார்த்துக்கொள்கிறேன்"

"அப்படியானால் உனக்கு என்ன குறை?"

நாட்டு மக்களையும், நாட்டின் வளத்தையும் நன்றாகப் பாதுகாத்து வருவதால், பொறுப்பும், வேலைபளுவும் கூடிவிட்டது. மேலும் இதேபோல் தொடர்ந்து சிறந்த ஆட்சி செய்ய முடியுமா என்ற பயமும், மற்றவர்களின் சூழ்ச்சியால் ஏதாவது பாதிப்பு வந்துவிடுமோ என்ற அச்சமும் மனத்திற்குக் குழப்பத்தை ஏற்படுத்தி அமைதியை இழக்கச் செய்துவிட்டது...

"அதனால் நாட்டை நல்லவர் யாரிடமாவது ஒப்படைத்துவிட்டு மன அமைதியோடு இருக்க விரும்புகிறேன் சுவாமி" என்றான்.

"ஒன்று செய் உனது நாட்டை என்னிடம் ஒப்படைத்துவிடு" என்றார் ஞானி.

இதைக்கேட்டு ஆச்சரியப்பட்ட மன்னன், "ஒப்படைத்துவிடுகிறேன் சுவாமி" என்றான்.

"சரி நாட்டை என்னிடம் ஒப்படைத்துவிட்டாய் இனி நீ என்ன செய்வாய்?" என்று அமைதியாகக் கேட்டார் ஞானி.

"என் வழிச் செலவுக்கு கொஞ்சம் பொருள் எடுத்துக்கொண்டு எங்காவது சென்று விடுவேன்" என்றான் மன்னன் சற்றும் தயங்காமல்.

"நாட்டையே எனக்கு தந்த பிறகு அதிலுள்ள கஜானா என்னுடையதுதானே! அதிலிருந்து பொருளை எடுக்க உனக்கு ஏது உரிமை?" என்று அவனை மடக்கினார் ஞானி.

திகைத்த மன்னன் "தாங்கள் சொல்வது சரிதான், நான் இப்படியே புறப்படுகிறேன்!" என்றான் தீர்மானமாய்.

"எங்கு போவாய்?" ஞானி மன்னனை விடுவதாயில்லை.

"எங்காவது போய் ஏதாவது வேலை செய்து பிழைத்துக் கொள்வேன்" எதற்கும் தயாராயிருந்தான் மன்னன்.

ஜென் கதை 'செயலற்ற செயல்'

"அந்த வேலையை என்னிடமே நீ செய்யலாமே!" என்ற ஞானி, "என் பிரதிநிதியாக இந்த நாட்டை நீயே பராமரித்து வா. வழக்கம்போல் உன் கடமைகளைச் செய்து வா. அதனால் ஏற்படும் விளைவுகள் என்னைச் சேர்ந்தது. உன் செலவுக்கு அரண்மனைப் பொக்கிஷத்திலிருந்து ஊதியம் எடுத்துக்கொள். எனக்கு எப்போது வசதிப்படுமோ அப்போது நான் வந்து கணக்கு வழக்குகளைச் சரிபார்த்துக் கொள்கிறேன்" என்றார்.

சரி என்று சொல்லிவிட்டு நாடு திரும்பினான் மன்னன். இரண்டு ஆண்டுகள் ஓடின.

திடீரென ஒருநாள் ஞானி அவனது அரண்மனைக்கு வந்தார். மன்னன் ஓடோடி வந்து பணிந்து அவரை வரவேற்றான்.

ஞானி ஆசனத்தில் அமர்ந்தார்.

"என்ன மன்னா எப்படியிருக்கிறது நாடு?"

"ஆஹா சுபிட்சமாயிருக்கிறது. கணக்கு வழக்குகளை கொண்டுவருகிறேன். எல்லாம் சரியாக இருக்கின்றதா என்று நீங்களே சரி பார்த்துக் கொள்ளுங்கள்" என்று எழுந்திருந்தான் மன்னன்.

கணக்குகளைக் கொண்டுவர எழுந்த மன்னனைக் கையமர்த்தித் தடுத்தார் ஞானி.

"கணக்குகள் இருக்கட்டும், உன் மன நிலை எப்படி இருக்கிறது?"

"மனச்சுமை ஏதுமின்றி நிம்மதியாக இருக்கிறது சுவாமி" என்றான் மன்னன்.

"எப்படி"? என்றார் ஞானி.

"காரணம் புரியவில்லை" என்றான் மன்னன்.

"இதற்கு முன் நீ செய்த ஆட்சிக்கும், இந்த இரண்டு வருட கால ஆட்சிக்கும் ஏதாவது மாறுதல் உண்டா?" ஞானி நிதானமாகக் கேட்டார்.

"இல்லை" என்றான் மன்னன் திகைப்புடன்.

"அதே அரண்மனை, அதே அதிகாரிகள், அதே பரிபாலனம், ஆனால் இப்போது உனக்கு நிம்மதியிருக்கிறது. அப்போது அது இல்லை. இது ஏன்?"

அரசன் விழித்தான். ஞானி விளக்கினார்.

இப்போது நீ செய்துகொண்டிருப்பதுதான் "செயலற்ற செயல்" அப்போது அனைத்தையும் நீயே செய்துகொண்டிருப்பதாக நினைத்து கொண்டிருந்தாய். உனது செயலினாலே அனைவரும் சுபிக்ஷமாக வாழ்வதாக மனதில் சுமந்துகொண்டு அதன் விளைவின் மீது பந்தம் வைத்துக்கொண்டிருந்தாய். அதுவே உன் மனச்சுமைக்கும் நிம்மதியின்மைக்கும் காரணம்.

இப்போது நீ எதையும் மனதில் சுமக்காமல் உன் செயலில் மட்டும் கவனமாக இருக்கிறாய். இப்போது நீ வேறு உன் செயல்வேறு என்ற பிரிவு இங்கு கிடையாது. இருப்பது செயல்மட்டுமே. எதிர்பார்ப்பற்ற செயல்மட்டுமே. விளைவில் பற்றற்ற செயல்மட்டுமே உள்ளது. இதுவே "நிஷ்காமிய கர்மம்". இதுவே செயலற்ற செயல்.

"விளைவில் பற்றில்லாமல், செயலில் இயல்பாய் ஒன்றி செயல்படுவதே செயலற்ற செயல்" என்று கூறி விடைபெற்றுக் கொண்டார் ஞானி.

அரசன் ஞானம் பெற்று சிறந்த ஞானியாகவே ஆட்சி செய்தான்.



**Book packet** containing printed books

*If undelivered please return to:*



Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

To

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.

# பகவத் பாதையில் மலர்ந்த மலர்
# புரிதலுக்கு பின்னே ..... அனுபவம் ....

என்றும்போல் அன்றும் அதிகாலை தி.நகர் பனகல் பூங்காவில் நடைப்பயிற்சி மேற்கொண்டேன். தினமும் சீகுஸ், Reverse Walking போன்ற வித்தியாசமான, மிகச் சிறந்த உடற்பயிற்சிகள் மேற்கொள்ளுவது வழக்கம். திறந்தவெளியில் பின்னே நடத்தல் பயிற்சி மேற்கொண்டிருந்தபோது என் கண்ணுக்கே புலப்படாமல் வழியிலேயே வைத்திருந்த ஒரு மூக்கோணக்கால் கொண்ட விளக்கு கம்பத்தில் கால் இடறி மல்லாக்க விழுந்த நேரம் எந்தவொரு சிந்தனையும் இல்லாமல் கவனம் முழுவதும் விழுந்து அடிபட்ட என் இடக்கையில் தான் இருந்தது. அக்கணம் "அடாடா போன வருடம் வலக்கை அடிபட்டதே இவ்வருடம் இந்தக் கையா" என்று மட்டுமே தோன்றியது. எவ்வாறு இப்படி விழுந்தேன்? ஏன் கவனிக்கவில்லை? என்று ஒரு கணம் தோன்றினாலும், நானாக சுதாரித்துக் கொண்டு எனது வலக்கையால் இடக்கையை தாங்கிக் கொண்டு எழ முயன்றும் முடியவில்லை.

என்னைச் சூழ்ந்த சிலர் வேடிக்கைப் பார்த்த வண்ணம் இருந்தார்களே தவிர உதவ முன்வரவில்லை. அவர்களோ என்ன ஆயிற்றோ, அல்லது ஏதேனும் ஆசனம் செய்கிறாரோ என்று நினைத்திருக்கக்கூடும். சமயோஜிதமாக நான் ஒருவரை அழைத்து என்னை தூக்கி, வீட்டிற்கு அழைத்துச் செல்லுமாறு கேட்டுக்கொண்டு வீடு வந்து சேர்ந்தபிறகு அடுத்தடுத்ததாக காயப்பட்ட கையை சரிபண்ணும் எண்ணத்தில் ஆகவேண்டிய காரியங்களில் ஈடுபட்டது எண்ணம் – தீர்வைத்தேடி

Surgery எல்லாம் முடிந்து ஆஸ்பத்திரியில் தனியாக படுத்திருந்தபோது, விபத்து நடந்த, சம்பவம் தானாக மனதில் உதித்தது. (Thought) பொழுது போகாததால், அதனை Thinking ஆக மாற்றி ஏன் எதற்கு, எனக்கு ஏன் இந்த விபரீதம் என அடுத்தடுத்தாற்போல் ஓடிக்கொண்டேயிருந்தது. ஆனால் என்ன ஆச்சரியம் ஏதேனும் (excuse) சாக்குபோக்கு தேடாமல், ஆமாம் நிகழ்ந்தது, என்ன செய்வது, முடிந்துவிட்டது.

ஆக வேண்டிய காரியமும் பார்த்தாகிவிட்டது என்ற எண்ணமே மேலோங்கி வந்ததாலோ என்னவோ அந்த நீரோட்ட எண்ண அலைகள் ஓடி மறைந்த வண்ணம் தானாகவே அமைதி அடைந்தது. ஆக நான் விழுந்த சம்பவம் நினைவுக்கு வராமலில்லை. இருப்பினும் என்னுள் போராட்டமில்லை.

இந்த நிகழ்வு என் ஞானப்புரிதலின் after effect-ஐ கண்டு சற்று ஆச்சரியமடைந்தேன், மனைவியிடம் இந்நிகழ்வை மற்றும் மனோநிலை குறித்து பகிர்ந்துகொண்டேன். இதனை அவள் வேறொரு கோணத்தில் நோக்கினாள். பழகிப்போன accident யினால் உங்கள் மனது பக்குவப்பட்டு அந்த மனோநிலைபோல் தோன்றுகிறதோ என வினவினாள். என்னதான் accident பழகினாலும், போன வருடம் ஏற்பட்ட விபத்திலும் இந்த மனோநிலையில் தான் இருந்தேன். இந்த நிகழ்வு மீண்டும் ஊர்ஜிதப்படுத்தியது. ஆதலால் நமக்கு இந்தப் பிரவாகம் புரிதலுக்கு பின்னே தான் ஏற்பட்டுள்ளது. அதுவும் நிரந்தரமானது தான் என்றும் உறுதியாக கூற முடிகிறது.

என் மேல் பாசங்கொண்ட குடும்பத்தார், நண்பர்கள், அலுவலர்கள் அக்கறையின் பேரில் நிகழ்வை நான் என்னவோ Master Plan போட்டு செய்ததுபோல் கடிந்ததும், வருத்தப்படச் செய்ததும், வருத்தப்பட்டதுபோல் நான் நடித்ததும் அதனால் அவர்கள் திருப்தியடைந்ததும் தானாக இயங்கும் புறச்செயலை எதிர்கொள்ளும் ஆற்றலைக் கண்டு வியப்புற்றேன் - போராட்டமில்லாமல்

இம்மாதிரி பல (crisis) சிக்கலான சூழ்நிலைகளையும் சுலபமாக கையாளும் விதத்தை, தானாக சீர்படுத்திக் கொள்ளும் நிலையை அருளிய எங்கள் பகவத் ஐயாவிற்கு நன்றி.

அன்புடன்

பிரவாகம் பப்ளிகேஷன், சேலம்.